17th August 1960]

SRI N. R. THIAGARAJAN: இந்த குடவனாற்றுத் தண்ணீரைக் குளித்தலை விவசாயிகளுக்குக் கொடுக்க வேண்டு மென்று அந்தத் தொகுதி அசெம்பிளி உறுப்பினர் கேட்டுக் கொண்டிருந்தார். அதைப் பற்றி அரசாங்கம் கவனிப்பதாகப் பதில் கூறியதாகத் தெரிகிறது. திண்டுக்கல்லில் குடவனாறு திட்டமும், நிலக்கோட்டையில் ஒரு திட்டமும், வேடசந்தூரில் ஒரு திட்டமும் போட்டு நிறைவேற்ற அரசாங்கமும் முன்வருமா? குளித்தலைவாசிகள் கோரிக்கையை அரசாங்கம் கவனிக்காது என்று பதில் சொல்லுமா?

THE HON. SRI M. A. MANICKAVELU: இந்தக் குளித்தலைக்கும் குடவனாறு ஓடுவதற்கும் இடையில் 30 மைல் இருக்கிறது. குளித்தலை காவிரி ஆற்றங்கரையில் இருக்கிறது. அங்கு 30 மைல் தூரத்தில் உள்ள ஆற்றில் இருந்து தண்ணீர் கொண்டு செல்வது உசிதமல்ல. இந்த ஆறு திண்டுக்கல் தாலுகா வழியாகப் போகிறது.

*Visit of foreign dignitaries*

*220 Q.—SRI A. VEDARATHNAM: கனம் முதல் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிட் பாரா—

(அ) 1959–60-ல் வெளிநாட்டுத் தலைவர்கள் எத்தனை பேர் நம் மாநிலத்திற்கு வந்தனர்?

(ஆ) எந்தெந்த நாட்டுத் தலைவர், யார் யார் வந்தனர்?

(இ) எங்கு தங்கினர், என்ன செலவாயிற்று?

THE HON. SRI C. SUBRAMANIAM: (a) & (b): The following three leaders from foreign countries visited Madras during the period from 1st April 1959 to 31st March 1960:—

(1) His Excellency Mr. Tage Erlander, Prime Minister of Sweden.

(2) His Excellency Mr. K. E. Voroshilov, President of the U.S.S.R.

(3) His Excellency Dr. V. J. Sukeelainen, Prime Minister of Finland.

(c) At Madras all the three leaders stayed at Raj Bhavan, Guindy. The Prime Minister of Sweden visited Madurai and Tirupathur (Ramanathapuram district) also and he stayed at the Circuit House at Madurai and at the Swedish Mission Hospital of Tirupathur. The figures of the expenditure incurred on the visits of these leaders are not readily available, and the time and labour involved in collecting the information will not be commensurate with the public interest served.

SRI A. VEDARATHNAM: அந்தத் தலைவர்கள் அனைவரும் பார்வையாளர்களாகத்தான் வந்தார்களா? அல்லது வேறு என்ன ஜோலியாக வந்தார்கள்?

THE HON. SRI C. SUBRAMANIAM: நம் நாட்டையும் நம் நாட்டு மக்களையும் பார்ப்பதற்காக வந்தார்கள்.